# ஆத்மஜோதி

திலலைவாழ் அந்தணர்க்கும், அடியார்க்கும் அடியேன்.

ஒரு ஒரு மனிதி மனித சீவ சரீரத்தில் ஈசன் 5 அறிவோடும், பகுத்தறிவாகிய (நாம் நாலுக்கு வேணும், தாய் தங்கை உறவினர் பிறர் பிறாது என்ற அபிமானத் தோடு கோப, தாபப் பிரிந்தறிவாகிய மனிதன் சரீர அபிமானத்தோடும் இருக்கின்றோம்.



மிருகாதி 5 அறிவோடும், அதற்குத் தாழ்வானவை குறைந்த குறைந்த அறிவாகவும், குறைந்த குறைந்த அறிவாகவு மிருக்கின்றன. யாவும் சரீரத்திலும் நாபிக்குங் கீழ் துரியாதீதம் அது அதர்வண வேதம். தொனிபாட் டின்றியது. நாபி (தொப்புள்) யிடம் சாம வேதம் தொனிபாட்டுடைய விவேக விருத்தி. அதுவே அருள், பார்வதி பரசிவன் அவ்விருவரும் பிரம்மா முதலிய ஈரேழு பதினாலுலகைக் காட்டும்படியான சஞ்சீத மூட்டையை சீவர் களுக்காக வைத்திருக்கிற பார்வதி பரசிவன்; நெஞ்சில் யசுர் வேதம். தொனிபாட்டுடைய மாயை விருத்தியில் சிருட்டி, திதி, சம்மாரமுள்ள பிரமாதியர் இருக்கிறார். கண்டத்தில் உருக்கு வேதம், தொனிபாட்டுடையது. முருக னிடம் மன விருத்தி சீவர், விஞ்சையர், சித்தர். இந்திரியத்தில் தேவர்

நேத்திர இந்திரியத்தில் தேவேந்திரன். தேக அபிமான துர்க்குண அகங்கார அசுரர். இந்திரியவிஷய கற்பித உலக தேக மனிதர்களோடும், ஒவ்வொரு சரீரமும் பகிரண்ட சரீரத்துடன் பகிரண்ட விசேடப் பரசிவனாய் விளங்குகிறார் கடவுள். இப்படிப் படித்தும், கேட்டும் நிச்சயமாய்த் தெரிந் ததுவே பரோட்ச ஞானமாகும். இப்படி விளங்காதவர்கள் பரோட்சஞானமே யில்லாத போலிகளாவர்.

## கைவல்யம் விசேட கடவுள் வணக்கம்:-

"பொன்னிலம் மாதராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தூரத்தில் சாட்சி மாத்திரமாய் நிற்கும்
யென்னிலங் கீளிலும் மிக்க எழுநிலம் அவற்றின் மேலாம்,
நன்னிலம் மருவும் ஏகநாயகன் பதங்கள் போற்றி"

(இ—ள்) பொன்னிலம் மாதர்—ஆசை பொருந்தினர் பொருந்தார்—இந்திரியம் தேவர் உலகம் அது பொன்னுலகம் மித்தையாசீவன் இந்திரியத்திலும்—நிலம்—இந்திரியவிஷயம் மண்ணுலகம் தேக உலகாதிகளில், மித்தையாசீவன் இந்திரிய விஷயத்திலும்—மாதர்—நினைவு மனம் மித்தையா சீவனுக்குப் பெண்சாதி, இதுதான் மண், பொன், பெண், மூவாசை மூன்றிலும் இச்சையுடைய மித்தையாசீவன் நான் ஆண், பெண், சந்நியாசி, பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன், வித்துவான், பறையன், பள்ளன் என்று நிச்சய புத்தி தொழிலுடையவர்களும் முத்துரியஞ் சென்று தான் துரியாதீத சர்வசாட்சி சுத்தப் பிரம்மமாய், உலகுயாவும் தன் அருள் சத்தி உல்லாசம் அது திருவிளையாட்டு இரத்தின ஒளியைப்போல் சாட்சியாகிய தன் சாயல் என்று துரிய

உணர்வாய் விளங்கினவர்களும்-உள்ளந்தன்னில்—சாட்சியா கிய தன்னில் அகண்ட அருளாய் அறிவு வெளியாய் சுத்த சூன்யமாய் இருதிறத்தாரும் இருக்கிறார்-அந்தரத்தில் சீவ சாட்சிமாத்திரமாய் நிற்கும்—சீவன் மாயைமனவிருத்திக்குக் கட்டுப் (பந்தப்) படாது அருள் சிவமாய் இருக்கும். ஆண் பெண் என்கிற சீவர்கூட எப்போதும் சாட்சியாகவேதான் இருப்பர்-என்னிலங்களினுமிக்க எழு நிலம்—இந்திரியம் 5 மனம் 1 ஆறும் நிலம். 6க்கும் மேலானது சாட்சி 7-வது பூமி—அவற்றின் மேலாம்—ஆறும் மித்தை (பொய்) யாய் சாக்கிரஞ் சொற்பனந்தோறும் உலகம் பூமி சூரியாதி உடம்பு யாவும் சூட்சும உலகு தூல உலகாகத் தோன்றித் தோன்றி வேறு வேறு புதிது புதிதாய் வந்து வந்து சுழுத்தியில் அழிந்து (அடங்கிப்)போகிறது. சர்வசாட்சி சுத்த சூன்ய அறிவு வெளிதான் அழியாமலிருப்பது. ஆறும் மித்தை(பொய்)யில் கட்டுப்படாதது நன்னிலம்—மருவும் ஏக நாயகன் பதங்கள் போற்றி—சொரூப உப நிடதப்படி தத்துவமசி மகாவாக்கியப் படி—தத்—நெஞ்சில் உள்ள மாயை அகண்டாகார விருத்தி—துவம்—கண்டம்மனவியட்டிவிருத்தி-அசி—நாபி(தொப்புள்) விவேக விருத்தி அது அருள்; அருள் விருத்தியும் துரிய அறிவில் அடங்கினால் முத்துரியாதீத சாட்சி அறிவாய் இருந்து, இந்திரியவிஷய கற்பித உலகந் தோன்றியும் தான் சாட்சி அறிவாய் விளங்குஞ், சீவன் முத்த பகிரண்ட *சரீ ராலய பரசிவனாய் விளங்கும் குருராயனை ஆத்மப் பிரயோஜ னத்தின் பொருட்டு யான் தில்லை (அருள் விருத்தி ஒடுங்கினது துரியாதீதம்) துரியப்பிராமணராகிய அந்தணர்க்கு (நான் சர்வசாட்சி விருத்தியாய் விளங்கும்) வணங்குவே னென்றார்.

*சரீராலயம்:-பகிரண்ட சரீரத்தோடு பரசாக்கிரத்தில் தூல உலக பூமி சூரியாதி தேகமாகவும், பர சொற்பனத்தில் சூட்சம உலக பூமி சூரியாதி தேகமாகவும், பரசுழுத்தியில் பஞ்சப் பிரளயம் பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவன் 5 பேரும் இறந்துபோன பிரளயம். துரியாதீதம் சுத்தப் பிரம்மமாய் இருந்து பிறகு பகிரண்ட பரசாக்கிர தூல உலக தேகமாய் பரசொற்பனத்தில் சூட்சம உலக தேகமாய் கற்பனையாகத் தோன்றித் தோன்றி சர்வ சாட்சியில் லயப் பட்டு பிறகு சரீரத்தோடு தான் பிரம்ம அருளாய் விளங்குவ தினால் சரீராலயமென்றார். "அங்கமே கோயிலாய்ப்பூண்டான் தன்னை" இந்திரியம் 5 மனம் 1 ஆறும் பூமி, சாட்சி 7ம் பூமி என் அநுபவம்.

சாதன மின்றி யொன்றை சாதிப்பா ருலகிலில்லை
ஆதலா லிந்த ஞான்கும் அடைந்தவற் கறிவுண்டாகும்
நூதன விவேகி யுள்ளம் நுழையாது நுழையுமாகிற்
பூத சென்மங்கள் கோடி புனிதனும் புருடனுமே

(இ—ள்) சாதனம் இன்றி யொன்றை சாதிப்பார் உலகில் இல்லை=மனம் புத்தி சித்தம் ஆங்காரம் நாலும் இல்லாமல் விஷய உலகப் பொருளையாவது தற்சாட்சியை யாவது விளங்கிக்கொள்ள முடியாது. இதுவன்றியும் வாக்கு சத்தத்தை விவேகசீவன் அறிவது வாக்கு மௌனம். கண்ட இடம் மனதை அறிவது மன மௌனம். நெஞ்சில் அகண்டா கார விருத்தியாகிய மாயையும், அறிவது காஷ்ட மௌனம். நாபியில் விவேக விருத்தியாகிய அருளை அறிவது, சுழுத்தி மௌனம். (இது வாசிட்டம்) இந்த நான்கையுமின்றி சாட்சி

யாகிய தன்னை தெரிந்து அநுபவஞ் சாதிப்பவர்கள், உலகத்தி லில்லை—இந்த நான்கையும் அடைந்தவர்க்கு அறிவு உண்டாகும்—மேல் சொல்லிய நான்கும் நாபித்தானத்தில் ஒடுங்கி துரியாதீதப்பட்டவருக்குத்தான் நான் சாட்சி அருளாய் விளங்குகிறேரும் என்ற உண்மை அறிவு உண்டாகும்—நூதன விவேகி உள்ளம் நுழையாது—என் குடும்பாதியை மாயை (பொய்) உலக தேகத்தை நான் இருக்கிறபோதே பூமி பொருள் மனையாதிகளை மேலும் மேலும் மடம் மடமாதி பொருள்களை நாமுள்ளபோதே உயர்வுபடுத்த வேணுமென்ற அவாவும், உலக தேகஞ் சத்தியமாய் நீண்டகாலம் கற்பகற்ப காலம் இருக்கிறது என்றவர் நாஸ்தீகர். நாஸ்திகப் புத்தி யுள்ளவருக்கு குரு அநுபவங் காட்டினுல், நுழையாது இந்த ஆஸ்திக அநுபவம் நிலைக்காது—நுழையுமாகில் பூத ஜென்மங்கள் கோடி புனிதனும் புருடனுமே—அநுபவந் திடமானுல் சாக்கிரம் சொர்ப்பனந்தோறும் தூல பூமி சூரியாதி உலக தேகம் சூட்சம பூமி சூரியாதி உலக தேகம் வேறுவேருய் புதிது புதிதாய் உண்டாகிறது. அதில் அதில் அபிமானிக்கக் கூடிய குடும்பாதி மடம் மடமாதி ஆலயாதிகள் யாவும் பிரம்ம சாட்சி அறிவில் பழுதையில் பாம்பு கிளிஞ்சலில் வெள்ளிக் கட்டையில் கள்வன் கானலில் வெள்ளம்போல் விவர்த்தம் (பொய்) என்று சாக்கிரந்தோறும் இவ்வித விசாரம் உடையவர் அவர்தான் சாக்கிரந்தோறும் புனிதமாய்ப் பிறந்து வந்தவர். சாக்கிர இந்திரியம் (பூதம்) விழிப்பு தூல உலகத்தில் பிறவிதோறும் விசாரமுடையவருக்கு சர்வசாட்சி புனித அனுபவம் விளங்க, நூல்படி குருகாட்டினுல் தீவிரர்க்கு சரீரத்திலும் அநுபவம் திடமாகும்.

## நாஞ் ஸ்ரீவவாதக் கட்டளை 36 தத்துவ விபரம்:-

இந்திரிய விஷயம் தூல பூதங்கள் சமட்டி மண் (பூமி) தண்ணீர் அக்கினி வாயு ஆகாயம் ஆக தூலபூதம் 5, இந்திரிய வியட்டி (தனிமை) விஷயம் ஒரு ஒரு சரீரம் தோல் ரத்தம் மாமிசம் நரம்பு எலும்பு மூளை ஆக பௌதிக சரீர தத்துவம் 6, தூல பூதம் தூல பௌதிக சரீரம்கூடிய தத்துவம் 11, இப்படியுள்ள சரீர காது ஓட்டையில் பலபல சத்தத்தை கேட்கும் இந்திரியம் சுரோத்திரம். சரீர முழுவதும் சூடு சில்லிப்பு கடினம் மெலினம் அறியும் இந்திரியம் தொக்கு. நேத்திரத்தில் பலபல ரூபத்தை அறியும் இந்திரியம் சட்சு. நாவில் பலபல ரசத்தை அறியும் இந்திரியம் சிங்குவை. மூக்கில் பலபல துர்வாசனை நல்வாசனை அறியும் இந்திரியம் ஆக்கிராணம். ஆக சூட்சும ஞான இந்திரியம் 5, நெஞ்சில் உள்ளம், கண்டத்தில் மனம், நேத்திரத்தில் புத்தி, நாபியில் சித்தம், சரீரமுழுவதும் ஆங்காரம் ஆக அந்தக்கரணம் 5, சரீர முழுதும் வியானவாயு. நெஞ்சிலிருந்து நாசிகாதி பரியந்தம் வருவது, பிராணவாயு. குதம் (சூத்து) அபானவாயு. நாபியில் சமானவாயு, கண்டத்தில் உதானவாயு ஆக வாயு 5, வாயில் சத்திக்கும்படியான வாக்கு இந்திரியம், கையில் குடுப்பது வாங்குவதாகிய தான இந்திரியம், காலில் போக்குவரத்தாகிய பாதஇந்திரியம், குதத்தில் மலசல விசர்சன இந்திரியம், உபஸ்தம் ஆண்குறி பெண்குறி சுகம் ஆனந்தத்தைத் தரும்படியான இந்திரியம் ஆக கருமேந்திரியம் 5, ஆக சூட்சும சரீர தத்துவம் 20. சூட்சும தூலங்கூடி ஆக தத்துவம் 31. நெஞ்சில் சமட்டி (பலபல) மாயைதான்

நாபியில் வித்தை (ஞான உமையவள்) பரசிவன் 2. நாபிக்குங் கீழ் சர்வசாட்சி சுத்தப் பிரம்மம் 1. இவைகள்தாம் கூடிய தத்துவம் 36 குருவால் விசாரித்தறிக.

## பஞ்சாட்சரம் ஐந்தும் அநுபவ விபரம்:-

1 ஓம் நமசிவய; தூல பஞ்சாட்சரம் வாக்கு (சரஸ்வதி) செபிக்கிறாள் தூலம் அட்சர பதங்களும் அப்படியே. இது சாக்கிர இடம். 2 ஓம் சிவயநம; சூட்சும பஞ்சாட்சரம் விஷய மகாகாரண மனோன்மணி செபிக்கிறாள் கண்ட இடம் மனமே சூட்சுமம் அட்சர பதங்களும் அப்படியே சொர்ப்பன இடம் 3 ஓம் சிவய—வசி; உலகம் இயாவுக்கும் காரண பஞ்சாட்சரம் தேசஸ்ஸாகிய உலக மாயை செபிக்கிறாள் நெஞ்சு இடம். பிரமா விஷ்ணு உருத்திரன் இருப்பு சுழுத்தி இடம். 4 ஓம் சிவ; சுத்த சர்வ மகா காரணம் அருள் (சிவகாமி) செபிக்கிறாள் நாபி இடம் துரிய பரசிவன் பார்வதி இருப்பு. 5 அருள் விருத்திபும் விட்டிருப்பது துரியாதீதம் இது மகா மௌனம், இவ்விடஞ் சென்ற சீவர்கள் பகிரண்ட பரசிவன், இவ்வித அநுபவம் இல்லாமல் ஆஸ்திகர்களுக்குப் படிப்பு பாடஞ் சொல்வதும் கேட்பதும் இருவருக்கும் சொல்மாத்திரமே இது விவேகம் அல்ல. இந்த அநுபவம் சர்வ சாஸ்திர குருவின் அநுபவம் இவ்விதமே. உலகம் சத்தி மயம் சத்தியேதான் சத்திக்கிறாள். இதனை குருவாலறிக.

## அல்லமா பிரபு லிங்க லீலேப்படி அநுபவம்:-

நாபித்தான உமையவளுக்கு முக்குண சத்தி முழக்கமே உலகம். அது விபரம் சத்துவகுணசத்தி 1, இராசோகுணசத்தி 2, தமோகுணசத்தி3மூன்றுபேர்களும்உலகத்தைச்சேடிக்கிற

சேடியர்கள். சர்வ உலக ஆட்டமும் சத்தியே. 1 சத்துவகுண சத்தி நெஞ்சில் உள்ளவள், அவள் ஞான சொரூபி தனக்குத் தானே விளங்கி நாபியிடம் அருள் உமையவளோடு ஏகத்துவமாய் ஒடுங்கவும், பிறகு ஓங்கி விளங்கி நெஞ்சில் இருப்பதால் ஞான சத்துவகுணசத்தி, இவளிடம் சென்ற சீவன் சுகமாய் இருப்பான். 2 கண்டத்தானத்தில் உள்ள இச்சை இரசோ குணசத்தி, இவள் விமலை மனம் புத்தியே விமலை. வேறு வேறாக நன்று தீது யென்று வியாசம் (பிரிப்பது) பண்ணுவள். 3 நேத்திராதி இடத்தில் தமோகுணசத்தி, இவள் சத்தாதி விஷய உலக தேகம் மாயை. அவஸ்தை அவஸ்தை தோறும் தோன்றித் தோன்றி ஒடுங்குகிறதை எப்போதும் உண்மையாய் இருக்கிறது என்றே மித்தையா உலகத்தை அகண்ட சர்வசாட்சியாகிய தன்னை யறியாதவர்களுக்கு உறுதி பண்ணுகிறாள். இந்த தமோகுண சத்தியானவள் விஷய கோப விகற்ப காலத்தில், விமலையாகிய புத்தியையும் சேர்த்துக்கொள்ளுவள். விமலை பிறகு பிரிந்து விசாரித்து அறியாமையாகிய மூடத்தில் ஆடுகிற உலக தமோகுண சத்தியோடு சேர்ந்துவிட்டோம் என்று விசாரித்துப் பிரிந்துக்கொள்ளுவள் விமலை. இந்த தமோகுண சத்திக்கு உலக தேகத்தை அலங்கரிப்பதால் சந்தமாயை யென்றும் உமையவள்பெயர்கொடுத்திருக்கிறாள். இந்ததமோகுணசத்திஇவள் உலக் தருக்கி உலக செறுக்கி யென்று பெயர்.

## நந்திபாராயணர் சசிவன்ன போதப்படியும், அருட்பா இராமலிங்கம் படியும் அநுபவம்:-

1 சீவன் ஒரு விஷயத்தை ஒரு ஒரு இந்திரியத்தில் சேவக்கவுட சீவகரக்கிறம் 2 ஒரு ஒரு விஷயத்தை ஒரு

ஒரு நினைவில் யோசிப்பது சீவ சொர்ப்பனம். 3 சூட்சம அட்சரம் நினைவில் செபிக்கும். அப்போது மனஞ்சடமாய் விஷயத்தை வெளியில் அறியாமலும், உள்ளே தன்னை யறியாமலும், சாட்சியை யறியாமலும் தான் சாட்சி யறிவில் விளங்குவதாலும், தான் சடமாய் இருப்பதால் சீவசுழுத்தி. 4 சடமனதை யறிவதாகிய சாட்சி அறிவுதான் சீவதுரியம். அதுவும் மனவிருத்தி விட்டிருப்பது. இனி சீவன் மன சாட்சியாகிய தன்னை சந்தேகமற அறிந்துகொண்டான் அது தொன்பதலட்சியம். ஆனதினால் இனி நெஞ்சில் உள்ள மாயை விருத்தியை சீவன் விசாரப்படி அறிந்து அநுபவம் விளங் காமல் உலகாக இருக்கிறது. 5 இந்திரிய விஷயத்தில் வியட்டி யென்பது தனிமையாய் என்னுடையது உன்னுடையது என்று சொன்ன மனம் எண்ணம் அற்று உலக தேகம் பூமி சூரியாதியைப் பார்ப்பது பரசாக்கிரம். 6 உள்ளேயே யோசித்து சூரியாதி பூமி தேகாதி ஜனங்கள் கும்பகோணம் முதலிய பட்டணம் கோவில் கடைத்தெரு ஜனங்கள் தானும் அங்கு அங்கு சென்று சென்று விஷயங்களை மனமாயையில் தோன்றியதைப் பார்ப்பது (அறிவது) பரசொர்ப்பனம். 7 காரண அட்சரத்தை நெஞ்சில் மாயையில் செபிக்கும்போது மாயை சடமாயும் வெளி விஷய உலக தேகாதியைக் கற்பித்துப் பாராமலும், உள்ளே உலக தேகம் யோசித்துக் கற்பனையைப் பாராமலும், தன்னை அறியாமலும், சாட்சியை அறியாமலும், தான் பிரம்ம சாட்சி யறிவில் விளங்குவதி ஞல் சடமாயை பரசுழுத்தி. 8 சடமாயை யறிவதாகியபிரம்ம சாட்சி அறிவு பரதுரியம், விருத்தி விட்டிருப்பதுவே. இனி சமட்டி மாயையும், உலக தேக தோற்றத்தையும்,

அறியும் சாட்சி யறிவு விளங்கினதினால் மாயை உலக தேகம் இல்லை. பிறகு அறிவும், அநுளுந்தான் மிஞ்சி இருக்கிறது. அது விவேகம். 9 விவேகமாகிய அருள் ஆனந்த சொரூபமாகலின் உதடு வெடிக்க நகைப்பது அருள் விவேகமே; அருள்சாக்கிரம். 10 அருள் விவேகத்தோடு உதடு வெடிக்காமல் உள்ளேயே சந்தோஷமாய்க் குலுங்குவது அருள்சொர்ப்பனம். 11 உள் சந்தோஷமும் அற்று இருப்பது அருள் சுழுத்தி. இது உபசாந்த நிலை. 12 நேத்திர இந்திரியக் கதவை மூடுவது அருள்துரியம். அது சமயம் அருளும் ஒடுங்கி துரியாதீத சர்வசாட்சியாய் இருக்கும் அருளும் (விவேகம்) வெளிப்படாது ஒடுங்கினதால் நின்ற நிலை காண்கிலேன் என்றார்.

## சிவஞானபோதம்:-

சிவம்; விருத்திக்குமுன் சாட்சி அறு சத்து. ஞானம் விவேக விருத்தி சித்து. (அருள்). போதம் விளக்கம் ஆனந்தம். (சித்து விளக்கமேதான்) இதுதான் மாணிக்கவாசகர், துரியாதீத விளக்கமே. முத்துரியஞ் சென்றவர்களுக்கு விவேகசாட்சி அறிவுதான் விஷயாதியை யறிகிறது யென்றே சொல்லவேணும். மனம் இந்திரியம் அறிகிறது என்று சொல்லக்கூடாது. மித்தையாவுலக விஷய தேகாதிகளை முத்துரியஞ் சென்று தற்சாட்சியை (தன்னை) யறியாதவர்கள், உலக தேக விஷயாதிகளை யறிவது மனமென்றுதான் சொல்லவேண்டும். குருவால் அநுபவம் விளங்கிக்கொள்ளாமல் இந்த நூலைப் படித்துப் பிறருக்கும் தனக்கும் சாட்சியறிவு அறிகிறது யென்று சொல்லிக்கொள்ளுகிறவர்கள், தற்

சாட்சியை அறியாத மூடர் கபடர்களே யாவார். அவர்களுக்கு ஈசன் 21 கோடி நரகம் மறுபடி மிருகாதி ஜென்மங் கொடுப்பது சத்தியம். ஞான விருப்ப தீவிரர்க்கு, ஜனன மரணம் நீங்கிய தன்னை யறிய விரும்பினவர்களுக்கு, மாயை உலகம் பொய், பொய்யைத் தெரிந்துக்கொள்வதற்கு நூல் பிரமாணம். இருட்டினில் இருந்துகொண்டு கண்ணை மூடி, இருட்டாக இருக்கிறது யென்று அறிகிறது சாட்சி அறிவு அல்லவோ! பகலில் கண்ணை மூடி இருட்டாக இருக்கிறது என்று சொல்லுகிறபோது, சூரியாதி பூமி உடம்பு யாவும் இல்லையே. சூரியாதி உடம்பு இருந்தால் உடம்புக்குள்ளே யுள்ள மனம் இந்திரியம் அறிகிறது என்று சொல்லலாம், அப்போது சூரியாதி உடம்பு இல்லையே! அதனால் மனம் அறிகிறது என்றே சொல்லக்கூடாது. சாட்சி அறிகிறது என்று சொல்லவேண்டும். கண்ணை விழித்தாற்றான் சூரியாதி உலகம் உடம்பு இருக்கிறது. இருளான இராத்திரியில் கண்ணை மூடினால், இருட்டை யன்னியில் வேறாக உலகம், உடம்பு, சூரியாதி, சந்திரன் நட்சத்திரம் முதலியவை இல்லையே. சுத்த சூன்யமாகிய சாட்சிதானே, தானாக இருந்து, தன்னைத்தானே அறிகிறது. மனம் உடம்பாதி இருந்து அறிய வில்லையே.

ஆத்ம சாஸ்திரப்படி விசாரிப்போம்:—சாட்சியாகிய தன்னை, அறியாதது அஞ்ஞானம். அதானது சாட்சியாகிய தானிருந்தும் தன்னைக் காணாத பொருள் ஒன்று உண்டோ? இல்லை. அப்படி இல்லாத பொருளான அஞ்ஞானத்தில் உண்டான மனம் (எண்ணம்) மனதில் அபிமான கற்பித சீவன் ஏது. இல்லாத சீவன் விஷய உலக தேகஞ் சத்தாதி

பஞ்ச விஷயங்களை அறிவானே? பொய்யான சீவன் அறிய மாட்டான். மனம் அறிகிறது என்று சொல்கிறவர் யோகியோ? பஞ்ச இலக்கண வித்வான்களோ? இல்லாத கவிவாணர்களோ? வேதாந்த பூபதி, சித்தாந்த பூபதி, ஞானி, சுவாமி, சந்நியாசி, சாஸ்திரியோ? யாவரும் போலியே. தன்னைத்தானே யறியாத மூடர் அஞ்ஞானியே. இவர்கள் சாஸ்திரம் வேண்டாம், அஞ்ஞானம் ஒரு பொருளல்லவே, சாட்சியான தன்னைத் தானே யறிந்தவர்க்கு, அஞ்ஞான மென்பது இல்லை ஞானியே. ஒரு பொருளல்லாத அஞ்ஞானமானது, சாட்சி யாகிய தன்னை மறைக்காது, அறியாது. ஞான இரத்தினக் குறவஞ்சி 32-ம் கவியில் "என்றும் அழியாத பொருள் என்னடி சிங்கி-இரு கண்ணையும் மூடி இருள் அழியாப் பொருளடா சிங்கா" யென்றார். தாயுமானவர் "இருளான பொருள் கண்டதல்லால்-வேறாய் என்னையுங், கண்டிலன், என்னடி தோழி. உள்ளதும் இல்லதும் ஆகி, உற்றுணர் வதுவாகி உளங் (சாட்சி) கண்டதெல்லாந், தள்ளெனச் சொல்லி யேனையன் என்னைத் தானாக்கிக்கொண்ட சமர்த்தைப் பார் தோழி" (இ—ள்) கண்டதெல்லாந் தள்ளு=பலபல ரூப சூரியன் பூமி உடம்பு உலகத்தைப் பார்ப்பதாகிய, கண் இந்திரிய துவார வாசல் கதவை-தள்ளெனச்சொல்லி=மூடச் சொல்லி-என் அய்யன்=என் குருநாதன்-என்னைத் தானாக் கிக்கொண்ட சமர்த்தைப் பார் தோழி=அறியாமையாகிய என்னை, சுத்த சூன்ய அறிவு வெளியாய், ஆக்கிக்கொண்டார். தான் சாட்சியாகிய தன்னை, யறியாத சிஷ்யனே யென்றார். 4 இந்திரியத்திற்கும், மூடத் திறக்கக் கதவு இல்லை கண்ணு தான் 4க்கும் காரணம். மூடினால் காரணமாகிய கண் போனால், காரியமாகிய ... [illegible]

போய்விட்டன. சுத்தசூன்ய அகண்ட அருள் அறிவுதான் இருக்கிறது. இது கனவு இன்றியே தூங்குகிற சுழுத்தி போலவே, தேகம் உலகம் இல்லாமலே இருக்கும். இதுதான் ஒரு சொல். ஓர் எழுத்து. "சுத்தசூன்யமாந் தன்னிலே, சேயிழை யுழன்று நின்றுனந்த நிர்த்தமிடும், தெய்வம் இங்கு என்னையாளும் "நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே" விஞயகற்கு, வடிவம், விஷ்ணு சசி (இருட்டு) வர்ணம். சாங்கிய (விசாரமுடையவர்)சாஸ்திரியர் சுத்தசூன்ய மென்பர். தாயுமானவர் பாயப்புலி 47ல், "மறக்கின்ற தன்மை இறத்தல் ஒப்பாகும் மனது ஒன்றில், பிறக்கின்ற தன்மை பிறத்தல் ஒப்பாகும், இப்பேய்ப் பிறவி இருக்கின்ற யெல்லைக்கு அளவில்லையே இந்த சன்ம அல்லல் துறக்கின்ற நாள், எந்த நாள் பரமே கொழும்பனுக்கே" தாயுமாஞர் இந்திரிய கோலாகாலம். இந்திரியமாம் பேய்கள். பாழ்த்த கருமங்கள் போராடுதே. வினைப் பகுதி யென்பன். பொறி புலனன்றி உலக தேகம் இல்லை. இந்திரசாலங் கனவு. பட்டிணத்தடி, "கண் மாயம் இட்டவனைக் கண்ணாரக் கண்டேண்டி" (இ—ள்) கண்ணில் மாயை உலக தேகத்தைக் காட்டிஞன்—கண் ஆர—கண்ணை மூடினதும் கண்டேன். மாயாண்டியைக் கண்டேன் "பொல்லாங்கு தீற்கும் பொறி யிலியைக் கண்டேண்டி. கண்மூடி மௌனியாகி" ஞான வாசிட்டம், சனகன் 25 கவி "இமைப்பதுவும் விழிப்பதுவும் சகத் தோற்றம் ஒடுக்கம்" (இ—ள்) கண்ணை மூடிஞல் இமைப்பது—சகம் உலக தேகாதியாவும் இறந்துபோய் விட்டன—விழித்ததும் கண்ணைத் திறந்ததும்—பிரமாதியர் உலக தேகம் உண்டாக்கிக்கொண்டே வருவர். உலக தேகம்

மாயைதானே பொய்த் தோற்றம் அல்லவோ? இதுபோலவே லீலைக் கதை 30-ம் கவியிலும், கனவு ஈசுர சொர்ப்பனம் சூட்சும உலக தேகம் மாயையால் உண்டாக்கிக்கொண்டே வருவர். நினைவு விழித்ததும், ஈசுர சாக்கிரம், பிரமாதியர் மாயையால் தூல உலக தேகாதிகளைக் காட்டிக் கொடுப்பர். இதுபோலவே பிரமாதியர் உலக தேகாதிகளைக் காட்டிக் காட்டி சுழுத்தியில் சர்வசாட்சி சுத்தப் பிரமத்தில் ஒடுங்கு வர். இவ்விதமேதான் பிரம்ம சத்திகள் கிரமம். உலக தேகாதி கள் பிரம்மத்தின் சத்திமயம். பிரமத்தில் சத்தி ஒடுங்கினால், உலக தேகாதி இல்லை. பிரம்மமாகிய சுத்த அருள்வெளிதான் உண்டு. சத்தி தோன்றினால் உலக தேகம் தோன்றும்.

## பகவற் கீதை, சாரத் தாலாட்டில்:-

"நீயும் நானும் புவிமேல் நிருபர்களும் மெய்புணர்வால், ஆபுங்கால் பிறந்து இறப்பது யாற்கும் இல்லை யென்றவரோ" (இ-ள்) நீயும்=மனவிருத்தியோடு நேத்திர இடம் விஷயத்தில் அபிமானி அருச்சுன னும்-நானும்=நாபித்தானத்தி லுள்ள பர மாத்மா நான் செஞ்சு இடம் மாயையினால் சாக்கிர சொர்ப்ப னத்தில் உலக தேகத்தைத் தோற்றி வைக்கிற நானும்-புவி= இந்திரிய விஷயம் பூமியாதி யுலக மனிதர்-மேல் நிருபர்=இந் திரியத் தேவர்களும்-மெய்புணர்வால் ஆபுங்கால்=சாஸ்திர விசார போலி பரோட்சமும் இன்றிய அபரோட்சமுத்துரிய அநுபவஞானத்தால் பார்த்தால் பிறந்திறப்பது-யாவர்க்கும்= இல்லவே இல்லை யென்றார் 8 கவி "இத்தரையில் பிறந்திறப்ப தெடுத்தவுடற் கடுத்த பொறி, நித்திய மாகிய வான்மா நின் சொரூபமென்றவரோ" (இ-ள்) இத்தரையில் பிறந்து இறப்

பது=உலகு சூரியாதி பூமி உடம்பாதிகள் பிறப்பதும் இறப்பதும்—எடுத்தவுடல்=இந்திரிய விஷய உலக தேகாதியாவும்—அடுத்த=உலக தேகமாயைத்தோன்றிஒடுங்குவதற்கு இடமாயுள்ள—பொறி=இந்திரியந்தான் உலக தேகம் இறப்பதற்கும் பிறப்பதற்கும் இடம், இந்திரியம் அல்லாமல் உலக தேகம் பிறக்கவும் இறக்கவும் வேறே இடம் இல்லை. பாக்கி இருப்பு சாட்சியாகிய அறிவுதான், மனஞ் சீவன் கூட இல்லை யென்றே நூலாசிரியர் உறுதிபண்ணி சொல்லிவிட்டார். உரையாசிரியர் பொன்னம்பல சுவாமி கோணிப்புளுகு யெவ்வாறோ? திருண்ணுமலை இரமணரிஷிகளும் தன்னுடம்பைத் தன் தாயார் பெற்றதாகவே தாயாரை சமாதி செய்து மலையில் இருந்தவர் கீழே வந்து தினம் பூசை செய்து அவ்விடம் ..ாத்து வருகிறார் என்ன காரணமோ? ஆனால், அவ்விருவரும் உலகில் கல்வியுடைய ஆள்திகர்க்கு உபகாரியோ? அல்லது அபகாரியோ? மனிதர் யூகித்தறிய, வள்ளலார். பதி பசு பாச பதி விளக்கத்தில், கவி "காணுறு புலன்கள் போகில் கரி சுரு மனம் போம் போனல், ஆணவம் போகும் போனல் ஆருயிர் போதம் போகும், சேணுறும் ஒளிக்கும் மேலாஞ் சிவப்பிரகாசந் தோன்றும், மாணனே இதுவே முத்தி நிலை யென மதித்திடாயே" (இ-ள்) காணுருபுலன்=நேத்திர இந்திரியந்தான் ரூபாதிகளைக் காணுரு புலன்—போனல்=கண்ணை மூடினல் குற்றமுள்ள மனமும் போய்விட்டது ஆணவமும் போய்விட்டது, வியட்டி சீவஞானமும் சமட்டி சீவஞானமும் போய்விட்டன. ஆகாசம் போல் ஒளிக்கும் (ரூபகத்துக்கும்) மேலாம் சிவப்பிரகாசம் (சாட்சியறிவாய்த்) தோன்றும் (இருக்கும்), சிஷியனே இதுவேதான் முத்திநிலையென்று ஞானசம்பந்

தர் உறுதியாகச்சொன்னார். மாயைஇலக்கணத்தில், உலகதேகா தியைக்காட்டும் கவி "மாயையே பொறிகளாகும்" என்றும், "ஐம்புலன் அடக்கலாலும் அறிவினை யடைதலாலும்" (சாட்சி அறிவாய் விளங்குவதினால். இந்திரியத்துவாரம் உலக தேகஞ் சத்தாதி பஞ்ச விஷயம் 5-ம் தன் சத்தி சாயல் தான் சகசாயல் தோன்றும்படியான இரத்தினம், அது ஆத்ம இரத்தினப் பிரபைதான். பலபல வித சத்தம் சத்த சபை, பல வித பரிசம் பரிசசபை, பல வித ரூபம் ரூபசபை, பல வித ரசம் ரசசபை, பலவித கந்தம் (மணம்) கந்தசபை, பஞ்ச சபையாய் மணுளி உலக தேகாதி மாயாமண்டபமாகிய பஞ்ச சபை வகுத்து பரிபூரணி பரிபூரணித் திருக்கிறாள். பரி பூரண அறிவானந்த நடேசன் பஞ்ச சபையில் பரிபூரண அறிவாய் அறிந்துக்கொண்டு, சரீராலயக் கோவில் தோறும் விளங்குகிறான் நடேசன். "வானவர் நாடு வழிதிறந்திடுமே" வானவர் இந்திரியம், இதில் நேத்திர இந்திரியம் தேவேந் திரன். மதுரை சோமசுந்திரர் திருவிளையாடல்; "மீன்வலை வீசியகானவன் வந்து வெளிப்படுமாயிடிலே" (கருத்து)சமுத் திரக் கரையிலுள்ள செம்படவ அரசனிடத்தில், மீனாட்சி பிறந்திருக்க, நந்திகேசுரர் சமுத்திரத்தில் சுறு மீனாக இருந்து அதம் பண்ண, முருகன் ஊமைப் பிள்ளையாய் இருக்க சோமசுந்திரர் செம்படவனாகத் தோளில் வலை போட்டு சமுத் திரக் கரையில் செல்ல, செம்படவர்கள் பார்த்து, இந்த சமுத் திரத்தில் ஒரு மீன் அகப்படாமல் இருக்கிறது, அதைப் பிடிப்பாயா? என்று கேட்க, இந்த மீனையும் பிடிப்பேன், வானத்தின் மீனையும் பிடிப்பேன், என்று சொல்லிப் பிடித்தார் மீனாட்சியைக் கல்யாணம் செய்தார். மதுரைச் செம்படவர்.

அக அர்த்தம்; சரீரத்திலேயே சொல்லிக்காட்டும். சோமசுந்தரக்கடவுள் நாபித்தான துரிய பகிரண்ட பரசிவனாய் விளங்கும் சீவன் முத்தனாகிய அநுபவக் குரு—சமுத்திரம்—இந்திரிய விஷய உலகமே-சுறாமீன்—மனம் இதர மீன்கள் இந்திரியம்ஊமைப்பிள்ளை—மனசாட்சி அறிவு-மீனாட்சி—நாபித்தான உமையவள் இந்திரிய விஷயத்தில் வந்திருக்க (விஷய சந்தோஷம்), முருகன் ஊமை—நான் மனசாட்சி அருள் சிவமென்று அநுபவஞ் செல்லவில்லை அதனால் ஊமை—செம்படவ அரசன்—மனவிருத்தி அபிமான சீவன்- அவனது குடிகள்—இந்திரியாதி அபிமானங்கள்-மதுரைச் செம்படவர்—நாபித்தான அருள் உமையவளோடுவிளங்கும் சீவன்- அவனது வலை—உலகு யாவும் தன் அருள் சத்தியில் அடங்கும்படியான செம்படம். அருளையுடையவன் செம்படவன் உலகு யாவும் அருள் வெளியில் தங்கும்படியான வலையைத் தோளில் போட்டு வந்தது—முத்துரியஞ் சென்று அநுபவித்துத் தற்சாட்சியை அறிய விரும்பினவர்களுக்குச் சரீரத்தில் காட்டிக் கொடுக்கும்படியான அன்பு வலையைச் சுமையாயுள்ளார்-இதர மீன்களைப் பிடிப்பது—அது யோசனை (மனோராச்சியத்தில்) இந்திரிய மீன்களைப் பிடிப்பது, யோசனையும் விட்டிருந்த போது, மனம் (எண்ணம்) நீக்கம் மனசாட்சி அறிவில் யோசனை பண்ணும் போது, மனம் விளங்கி இருந்தும், யோசனை விட்டிருந்த போது, சாட்சி அறிவாய் இருந்தும், மனம் என்கிற திருக்கை மீன் பிடிபடவில்லை. அப்படிப் பிடிபடாத தீவிர சிஷ்யன்—திருக்கை மீனைப் பிடிப்பாயா? வென்று கேட்டான் மேலும்—ஆன்மஞான அநுபவியை நோக்கி, எண்ணம் (மனம்) அற்று சாட்சி அறிவாய் விளங்கும்படி காட்டிக்

கொடுக்க முடியுமா? வென்றுங் கேட்டான். அதற்கு குரு—இந்த மீனையும் பிடிப்பேன் வானத்தின் மீனையும் பிடிப்பே னென்று பிடித்தார்—உண்மையாய் பேதமற்று கபடம் நீங்கி அபேத நிஷ்கபட தீவிர அன்பு கொண்டவர்க்கு, கண்டம் வியட்டி மனம், நெஞ்சு சமட்டி மனமாயை, விஷய சமுத்திரத் தில் பெண்டு பிள்ளை பூமிதனாதி இச்சையாகிய திடபந்த மன மென்கிற திருக்கை மீனைப் பிடிப்பேன்—மனதை நீக்கி தொன்பதலட்சிய சாட்சி யறிவாய் விளங்க வைப்பேன். நெஞ்சிலுள்ள சமட்டி மாயைத்தான் ஆகாயம் நட்சத்திராதி மீன்களையும் பிடிப்பேன். மாயையும் நீக்கி தற்பதலட்சிய பிரம்ம அறிவாய் விளங்க வைப்பேன். நெஞ்சில் உலக சிருஷ்டி பிரமாதியரையும், உலகந் தோன்றி வைக்கும் மாயை யும் நீக்குவேன். மீனாட்சியை மணஞ் செய்தது—இந்திரிய விஷயத்தை விஷயம் விஷயமாய்ப் பார்த்து சந்தோஷித்ததை, உலகு யாவும் நாபித்தான துரிய அருள் சிவமாய்த் தான் அநுபவம் நித்திய அகண்ட கல்யாண மங்கள சொரூபனாய் விளக்கினார். நந்திபாராயண ரிடங்கேட்ட சசிவன்னனுக்கு விளங்கினதுபோலவே, விளங்கலாயிற்று. இந்திரிய விஷயத் தில், நாபித்தான அருள்சத்தி வந்ததினால் மீனாட்சி யென்றும், நாபித்தானத்தில் துரிய பர சிவனிடத்தில் அருள்சத்தி நீங்காதிருப்பதால், பராசத்தி யென்றும் பெயர் வந்தது. இந்திரியத்தில்தானே உலக தேகாதி இருக்கிறது. இந்திரியக் கதவை (கண்ணை) மனோராச்சியம் (எண்ணம்) இன்றி மூடினால் உலகதேகாதிகள் இல்லை. இதனால், "மீன் வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே" சரீரத்தில் மனம், மாயை அருள் 3 விருத்தியும்நீங்கி, சும்மா இருந்தால்

மௌனசாட்சி துரியாதீத அறிவு விளங்கும். அது "குருவன்றி யாவர்க்குங் கூட வொண்ணாதே" "படித்தறிந்தபோதே பல கலை ஆகமங்களெல்லாம் எடுத் தெரிந்து விட்டோம் எமைவிட வேறில்லை" என்று, சரீரத்தில் அநுபவமாய்ச் சரீரசாட்சி அறிவைத் தெரியவேணு மென்ற தீவிரர்க்குப் பஞ்ச மௌனங்காட்டி விளக்கிக் கொடுக்கலாம்.

## போலி யோகிக்குச் சூடுகோல்:-

ஒருவர் சிறு சிறு திருட்டுத் திருடி 5, 6 நாட்களாக நாள் கணக்காய் ஜெயிலில் அடைந்தார். வேறு ஒருவர் பெரிய திருட்டுத் திருடி 1, 2 வருஷக்கணக்காக ஜெயிலில் அடைந்து வந்தார். இருவருந் தான் ஜெயிலில் அடைந்தவர்கள் அது போலவே, கண்ணை மூடி சிகப்பு சோதி முதலானதுகளைப் பார்ப்பதானது; சிகப்பு சோதி விஷயம் 1, அதை விளக்கும்படியான மன விருத்தி 2, சிகப்பாதிகளை அறியும் சீவனாகிய அறிவு 3, மூணு விதமும் திரிபுடி. இது—மனம்—விஷய சோதி 2-ம் ஒடுங்கி, ஏக அறிவு வெளியாய் இருப்பது ஞானம். நேத்திரம் விழித்த போதெல்லாம் ஒரு ஒரு மரம், மிருகாதி, மனிதர்கள் முதலியவைகள் விஷயம் 1, அவைகளை விளக்கும் மனவிருத்தி 2, விஷயாதியை அறியும் சீவனாகிய அறிவு 3, மூவிதமும் திரிபுடி. இது—மனம், விஷயாதி 2-ம் —ஒடுங்கி ஏக அறிவு வெளியாய் இருப்பது ஞானம். இவ்விதமாக ஞான சாஸ்திரப்படி தெரிந்துகொள்ளாமல், சோதியாதியைப் பார்க்கிறவர் பெரியத் திருட்டு. உலக விஷயாதியைப் பார்க்கிறவர் சிறிய திருட்டு. இதானது இருவரும் உலக தேகாதியைத் தோற்றி வைக்கும்படியான

மாயைப் பந்தமாகிய ஜெயிலில் அடைந்த குற்றவாளிகளே பாவார்கள். ஜனனமரணம் அற்ற, சாட்சிஅறிவாகிய தன்னைத் தெரிந்துகொள்ள விரும்பினவர்கள், மூடம் முட்டாள்தன மான அறியாமையில் தெரியாமல் சென்றுவிட்டோ மென்று, இது போலி, வேண்டா மென்று காறித் துப்பி மீண்டும் அதில் புத்தியைச் செலுத்தாமல் தள்ளுங்கள்.

## மூட உரை ஆசிரியர்க்குச் சூடுகோல்:-

கண்ணுளி பொம்மைக் கட்டைச் செய்தார், பிறவிக் குருடர் வர்ணம் வைத்தார், குருடர்கள் பார்த்துங் கேட்டுங் களித்தார்; அதின் விபரம் ஞான அறிவாளிகள் ஆத்டநூல் செய்தார், அந்த நூலின் உண்மையானது எவ்விதம் என்றால்; உலக தேகாதி மாயை, அது பரசாக்கிரந்தோறும் தூல உலக உடம்பாதிகள் தோன்றித் தோன்றி பொய்யாகவே போகி றது. பரசொர்ப்பனந்தோறும் சூட்சும உலக உடம்பாதிகள் தோன்றித் தோன்றி பொய்யாகவே போகிறது. கனவு இன்றி தூங்குகிற பரசுழுத்தியில், உலகம் உடம்பாதி சூரி யாதிகள் அற்று, சுத்தசூன்ய அறிவு வெளியாய் இருக்கிறது என்று பிறருக்கு விளக்கிக் கொடுக்காமலும், சரீரத்தில்—சாக்கிரஞ்—சொற்பனஞ்—சுழுத்தி—துரியம்—துரியாதீதம் வரையும்—இடமும்—பிரமாதியர் இருக்கிற இடமும், இராப் பகலற்ற இடமும், பார்வதி பரசிவன்—சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம், இருக்கிற இடமும்—விளக்காமலும்,—உபநிடதப் படி மனவிருத்தி, அகண்டாகார மாயைவிருத்தி, விவேக அருள்விருத்தி 3-ம், மேல்சொல்லிய யாவும் சரீரத்தில் இருக்கிறதை கோயிலூர் பொன்னம்பல சுவாமிகளும், பரம்

பனைகளும் உரை எழுதி விளக்கிக்கொடுக்காமலும், தன்னிடம் அநுபவம் பணிவிடை செய்து கேட்டவர்களுக்கு சரீரத்தில் விளக்கிக்கொடாமலும், பஞ்சாட்சர செபம், சகுண நிற்குண உபாசனை, பாஙிப—அங்காகதியாறுதியும், போலி யோகஞ் செய்யுங்கள் என்று சொல்லிவிட்டும், வேதநூல் உண்மையானது தனக்கு விளங்காமலே புரசை அருணசல சுவாமி உரையை நிந்தைபண்ணி, அதிகாரிகள் கையில் ஏறிக்காமல் போகும்படி, நூல் உண்மை தெரிந்தவர்கள் போலவே திடத்துடன், முழுமூட உரையை வெளிபிட. அறியாமையுடையவர் யாரும் படித்தவர் கேட்டவர்—மிக உண்மை என்று உலகில் படிக்கிறவருக்கு ஞான அநுபவம் தனக்கு விளங்கிவிட்டதாகவே பிறர்களை உயர்வு தாழ்வாக மனப்பாவனை பண்ணி களிக்கிறார்கள். ஆத்மநூல் ஆஸ்தீக விசாரணை யுள்ளவர்கள் இந்த நூலைப் பார்த்து, அந்த உரையும் உரை யாசிரியர் தியாறுதி கொள்கை யாவும் தள்ளவோ, கொள்ளவோ யோசித்துச் செய்யுங்கள். நாஸ்தீகருக்கு என் நூல்கள் சொல்லவில்லை. "எங்குஞ் சிவ மொழியவிரண்டில்லை வீசன் றன்றுணை". உயர்வு தாழ்வு பார்ப்பது (பாவனை பண்ணுவது) தான் ஞானமோ? 1, கருமம்—முடிவின்—விபரம்—கண்டத்தானம்—இந்திரியம் 5, மனம் 1, ஆறு இந்திரியத்தையும்—சாட்சி அறிவு அறிந்திருக்கும்—அநுபவமே கரும முடிவு, இவ்வித அநுபவம் விளங்கிக் கொண்டால் கருமம் நீங்கினது இவ்விதம் விளங்கிக்கொள்ளாமல் எவ்விதம் பத்தி செய்கிறதோ. 2, பத்தி முடிவின்—விபரம்—நெஞ்சு இடம் மாயை விருத்தியை—சாட்சி அறிவு அறிந்திருக்கும்—அநுபவமே பத்தி முடிவு—இவ்விதம் அநு

பவம் விளங்கிக்கொண்டால் பத்தி முடிந்தது. இவ்விதம் விளங்கிக்கொள்ளாமல் எவ்விதம் யோகஞ் செய்கிறதோ! 3, யோகம் முடிவின் விபரம்—நாபி இடம் அருள் விருத்தியை சாட்சி அறிவு அறிந்திருக்கும் அநுபவமே, யோக முடிவு—இவ்விதம் அநுபவம் விளங்கிக்கொண்டால், யோகம் முடிந்தது. இவ்விதம் விளங்கிக்கொள்ளாமல் எவ்விதம் ஞான அநுபவம் விளங்குமோ! 4, ஞான முடிவின் விபரம்—நாபியில் அருள் விருத்தியை விட்டு இருந்து அருளையும் அறிந்த அறிவாய்—சும்மா இருந்த நிலை ஞான முடிவு.

1, சாலோகம்—கண்ட இடம், மன விருத்தியை, அறிந்த சாட்சி அறிவாய் இருப்பது சாலோக பதம். 2, சாமீபம்—நெஞ்சில் மாயை அகண்டாகார விருத்தியை அறிந்த சாட்சி அறிவாய் இருப்பது சாமீப பதம். 3, சாரூபம்—நாபியில் அருள் விருத்தியை, அறிந்த சாட்சி அறிவாய் இருப்பது சாரூபப் பதம். 4, சாயுச்சியம்—நாபியில் அருள் விருத்தியும், விட்டிருந்ததுவே சாயுச்சிய பதம்.

இவ்விதம் சீவன் சாலோக பதம் கண்ட இடத்திலடைந்து, நெஞ்சில் சாமீப பதமடைந்து, நாபியில் சாரூபபதமடைந்து—நாபிக்குங் கீழ் சாயுச்சிய நாலாம் பதம் அடைந்த அநுபவியாய்—சீவன் இந்திரிய விஷயத்தில் வந்து உலகு யாவும் அருளாய் விளங்குவது முடிந்த நிலை. இவ்விதம் இல்லாமல்—நூல் படிப்பும், பாடங் கேட்பதும், வாக்கு சத்தத்திற்குத்தான் மோட்சம். சீவன் சாட்சி அறிவாகிய தன்னை அறிந்து (விளங்கி) மோட்சமடையவில்லை. படிப்பதற்குமுன் குடும்பாதி சுக துக்கம்போலவே மடம் மட-

மாதி சுக துக்கமே சீவன் அனடவன். வள்ளலார்—காசி முதலிய மூர்த்திகளும், பூசை தெரிசினம் ஆலய அமைப்பு எல்லாம், கல்வியுள்ள ஆஸ்தீகர்களுக்கு தற்சாட்சியாகிய தன்னைக் காட்டிக்கொடுக்கும் தேசிகன் தெரிசனத்திற்கு—மேல் சொல்லிய தெல்லாம் ஒப்பாகுமோ என்றார். என் நூல்கள் வேத ஆகமத்தையே ஆஸ்தீகர்களுக்குச் சொல்லியது. நாஸ்தீகர் உலகம் மாயை பொய்யில் பொய்யையே விருத்தி செய்யவேணு மென்ற இச்சை யுடையவர்களுக்குச் சொல்ல வில்லை. வாசிட்டத்தில்—காசி முதலிய க்ஷேத்திர மூர்த்தி பூசை, தன் பெட்டக மூர்த்தி ஆத்மார்த்த பூசை, சமாது பூசை, எல்லாம் ஆஸ்தீகற்கு இல்லை. கல்வியற்ற நாஸ்தீக மூடருக்குத்தான் சொல்லுகிறார் என்றே ஆகிறது—கல்லு, செம்பு, தரு, சுதை, மண்களில் தெய்வபுத்தி வைப்பது—கல்வியற்ற மூகரே என்றார். ஆஸ்தீகர் போலவே படிப்பும் பாடமும் பிறருக்குச் சொல்வதும், சொல் நடிப்பே, என்று தனக்கும் பிறருக்கும் விளங்காமல் ஆஸ்தீக நாஸ்தீகளுஞ் சொல்லியுஞ் செய்கை நாஸ்தீக இச்சையைத் தழுவிய செய்கையுள்ள அவர்களே வேத நூல்களும் ஞானவாசிட்ட தேவபூசை கதையிலும் தள்ளத்தக்கோர் வேசரிபோல் என்றார்.

கல்வியுள்ள ஆஸ்தீகர்க ளெல்லோரும் உலக தேகாதிகளை பழுதையில் பாம்பு கிளிஞ்சலில் வெள்ளிபோல என்றே சொல்லுகிறார்கள். அவர்களே அந்தப் பழுதைப் பாம்பானது சுத்த சடம் மித்தை (பொய்) மித்தையை தெய்வங்கள் மெய்யானது, அது கடித்து விஷம் ஏறிவிட்ட தென்றும், அந்த விஷம் நீங்க பஞ்சாட்சர செப புண்ணியத்தால் நீக்கி

விடலா மென்றும், அப்பாம்பு கடிக்கா திருப்பதற்கு வீடும், பாம்பின் உடம்பு சுகத்திற்கு, பாலாதி அபிஷேகமும், அதன் பசிக்காக அன்னாதி சாப்பாடுகளும், அது சந்தோஷத்தின் பொருட்டு அர்ச்சனை தோத்திரமும், அதற்குப் பலவிதமும், நாஸ்தீகர்போலவே செய்கிறார்கள். இச்செய்கையானது நாஸ்தீகர்களுக்குக்கூட தேவை யில்லையே. நாங்கள் கல்விபுள்ள ஆஸ்தீகரென்றே, சொல்லிக்கொண்டு, ஆலயம் பூசைமுதலானதும், செபாதி தோத்திரமும் அதில் வேண்டுகோளும் செய்துவருவது விவேக அறிவோ! நாஸ்தீக புத்தியோ! யூகித்தறியவும்.

## சூலை மறுத்தல்:-

சூலை—துன்பு, அதே துன்பம், அதே பந்தம், அதே தான் பிடிப்பு—மறுத்தல்—துன்பம் நீங்குகிறது, அது மனமேதான் (எண்ணம்) கஷ்டம், நீங்கினதும், ஒடுங்கினதும், சீவன் கஷ்டம் நீங்கி சாட்சி அறிவாய் இருப்பன். இதுதான் சீவகாருண்யம், சூலை மறுத்தல். இதையன்றி, பொருளினாலும், பூமியினாலும், பெண்ணினாலும், இன்னம் எந்த விதத்தினாலும் சீவனுக்குக் கஷ்டமில்லாமல் காக்கமுடியாது. மனதோடு கூடிய அபிமான சீவனுக்கு, மனம் (எண்ணம்) ஆனது, க்ஷணத்திற்கு க்ஷணம் சீவனுக்குத் துக்கத்தையே தரும். அந்தத் துக்கத்தை ஒருவரும் நீக்க முடியாது. கல்வியுள்ள அநுபவ ஆஸ்தீக ஆரூடர், கஷ்டசொரூப மனதை, நீக்கி, மனசாட்சியாகிய அறிவை விளக்கிக் கொடுப்பன். அது சீவகாருண்யத்தின் பொருட்டு, தனது அன்பினால் (கருணையினால்), நீக்கிக் கொடுப்பன். இதுவேதான் சீவ

காருண்ணியம். பாசவைராக்கியம்—பாசம்=மித்தை (பொய்) யாகிய, மன இந்திரிய விஷயமேதகமே நான். இதுபோலவே விஷயமேதக ஒரு பெண் சரீரத்தை, என் பெண்சாதி, இதுபோலுள்ளதை என் பிள்ளை, என் மாடு, என் நிலம், மரம், என்று கற்பித்து அபிமான மடைவது பாசம். இதுகள் யாவும், என் (நான்) சாட்சிஅருள் விளக்கம் என்ற அநுபவத்தால், யாவும் சித்து சடம் என்றே இருப்பதுதான் வைர (திடம்)மாய் இருப்பது. இதுதான் பாசவைராக்கியம். புலால் மறுத்தல்=மாமிசம் உண்ணுமை. அதானது இந்திரியவிஷயம் புலன். அது உடம்பு மாமிசம். உடம்பாகிய மாமிசத்தை, கற்பிதசீவன், நான் என்பதாகியதே மலம். அது மும்மலத்தோடுகூடிய சரீரத்தை நான் என்று இருப்பதுதான், கற்பித சீவன் மலத்தோடுகூடிய மாமிச புலாலைத் தின்றவன். அப்படித் தின்றுக்கொண்டிருந்த சீவனை, நான் சாட்சி சுத்த சூன்ய அறிவு என்ற அநுபவமும், என் சக்தியானது மித்தையாகவே, சாக்கிரந்தோறுஞ் சொர்ப்பனந்தோறும், உடம்பும் உலகமும், அதில் அதில் அருந்தல் பொருந்தல்களைக் காட்டி, கனவு இன்றி தூங்குகிற சுழுத்தியில் என் சக்தி என்னிடத்தில் ஒடுங்குகிறது. என்ற அநுபவதிடமே உறுதியாய் இருப்பதுதான், புலால் அருந்தாமை. இதுவேதான், சீவகாருண்யம், பாச வைராக்கியம் புலால் மறுத்தல். இது மூன்றையும், ஆத்மஞான சம்பந்தர், ஆதிசங்கரர், வேதாந்தி சித்தாந்திகள் சொன்னார்கள். இவ்விதம் இல்லாவிட்டால், ஞானிக்கு விதிநிடேதம் இல்லை என்றே சொல்லமாட்டார்கள். ஆனதால் இவ்விதந்தான் சீவகாருண்யாதியைச்சொன்னார்கள் என்று, முடிவாகத்தெரிகிறது.

ஆதி சங்கரர் மாமிசம்சரீரத்தைத வளர்க்கும், பால் ஆயுசை வளர்க்கும். நெய் விவேகபுத்தியை வளர்க்கும், என்றார். மாமிசம் சாப்பிட்டால் இரத்தவிருத்தியினால் சரீரம் பலமேறும். சரீர புஷ்டியிருந்தால்தான் மனிதருக்கு, பாலினால் மனம் (நினைவு) என்கிற ஆயுசு தைரியமாய் வளரும். மனமே தான் ஆயுசு. (நினைவு ஒடுங்கினால் சாட்சி அறிவுதான் இருக்கும். சாட்சி அறிவுக்கு ஆயுசுகாலம் இல்லை.) மன தைரியம் இருந்தால், நெய்யினால் விவேகஅறிவு தொழில் வேலைகளில், யூகமாகவே செய்துமுடிக்கும் என்றார்.

அகஸ்தியர்—கொல்லான் நோன்பு முனி, மலையி லிருக்கிற வர்—வெள்ளாட்டுக் கறிதனையே தள்ளாதப்பா என்று சரீரம் விருத்தியடைவதற்கு ஆயுள்வேத சாஸ்திரம் சொல்லி இருக்கிறார். பகவற்கீதை—கவி— "யாவனொருவன் தன் னுடம்பை யானென்றிருக்கும் இயல் பொழிந்தால், யாவ னொருவன் தன் கரணம் யாதொன்றோடும் விழைதல் (இச்சை) இலான், அவனவ னிவ்வுலகத்தை யடையக் கொன்றாலும் அவன், பாவமில்லை அவன்செய்தப் பழியு மில்லைப் பார்மன்னா" மச்சம் பிடித்து பழகினவர் பிடித்தே தீரவும், கசாப்பு பழகினவர் கசாப்பு செய்தே தீரவும், யுத்தம் பழகினவர் யுத்தஞ் செய்தே தீரவும், உபாத்தியாயராய்ப் பழகினவர் உபாத்தியாயராய் இருந்தே தீரவும், அவரவர்கள் தாய் தகப்பன் செய்த தொழிலோ, அல்லது வேறு தொழில் கற்றுப் பழகினதோ, அப்படியே செய்யவேணும். ஸ்திரீகள் தாய் செய்த வேலையைப் பெண் குழந்தை, வீடு கூட்டல் சமையல் முதலியதைப்பழகினபடியே செய்வர். தாசிகள் தாய் பழக்கின பழக்கச் செய்கையையே செய்வர். தாய் தகப்பன்

செய்கையைப் பழக்கின பழக்கத்தைத்தானோ, சேர்க்கைப் பழக்கத்தையோ, விடாமலே செய்தே தீரவேணும்.—செய்யா விட்டால் என் உலக சேவை நடவாமல் போய் விடும். இது பாவம் இத்தொழிலை விடவேணு மென்று விட்டால் மறுபடி அத்தொழிலை செய்யச் சென்மங்கொடுப்பே னென்று கீதை சொன்னார். அதுபோல் மாமிசம் தாய் தகப்பன் புசித்துப் பழகினபடி, தானும் புசித்துப் பழகினபடியே புசிக்கவேண்டும். இல்லாவிட்டால், பழக்கதோஷம் பிடிக்கும். சிலருக்கு நீக்கி சவுகரியப்படுகிறது. பெரும்பாலாருக்குச், சரீர தைரியம் குறையும். உலக தொழிலாகிய, காரியம் முடியாது. அதனால் புசித்துப் பழகினவர்களை புசிக்கவே சொன்னார்.

குமார தேவர் மகாருசா துறவில்—மனிதர்களுக்கு, தேவர்களை விட குறைந்த சுகம். அதற்குக் கீழான "தேவர் மனிதர் துன்பத்தின் திறங்க ளிவ்வா றுகி விடின், ஆவ கீழாம் மிருகமுதல் அசர மீறும் ஐவகையில், ஓவலில்லா துன்புக்கோர் உவமையில்லை"—அசரம்=மரமுதலியவை—ஈர்=நீங்கலாக—மிருகாதிமுதல், நத்தை, சங்கு, புழுவரையி லுள்ள, உயிர் சீவர்களுக்கு—ஓவலில்லா துன்புக்கு, ஓர் உவமை இல்லை=ஓயாமல் துன்பம் அத்துன்பத்திற்கு, சமானம் இல்லாத, மிகுந்த துன்பமே—அதுகளுக்குச் சுகமே கிடையாது. அதுகள் துக்க சீவன் என்றார்—மனமே (எண்ணமே) துக்க சொரூபமுடையது, அந்த மனதோடு கூடிய சீவனும் துக்கம். மனம் ஒடுங்கினால், சீவன் சுக சாட்சி அறிவாய் இருப்பன். மனமுஞ் சீவனும் தோன்றி விளங்கி ஒடுங்கவும்—சாட்சி சுக அறிவுதான் இடம். வேறே மனஞ்

சீவன் இருக்க இடமில்லை. அதுகளைத் தின்னும் பொருட்டு பக்குவகாலத்தில், உயிர் (பிராணன்) மனத்தையும், நீக்க பழகினவர், சுகசாட்சி அறிவில் ஒடுக்கினதை தின்றுப் பழகினவர் (சடமாமிசத்தைச்) சாப்பிடலாம். என்றார். மனிதர்கள் சிற்சட உடம்போடு சுகத்திலும் இருக்கிறார். அறிவு சாட்சியை அறியாமையினால்—விஷயாதி காரியங்களை, எண்ணி முடிவு அடையவில்லை யென்று, துக்கமுஞ் செய்து கொள்ளுகிறார்கள். அதனால் மனிதர்கள் சுகம் அடைகிறார். மனிதர்களை துன்மார்க்கமாக உயிர் நீக்கினவர்களுக்கு, கடவுள் (அந்தர்யாமி) மிருகாதி நரக ஜென்மமும், மரணகாலத்தில் 21 கோடி துக்கமும் கொடுப்பன்.

ஆத்மஞான வள்ளல்—கவி—"அம்மா வென வலறி ஆருயிரைக் கொன்றருந்தும் இம்மானிட ரெல்லாம் இன்புற்றிருக்கின்றார், அம்மாவெனுஞ் சத்தம் கேட்டகன்ற மாதவற்கு பொய்மா நிறையமென்றால் புசித்தவற்கு யென்சொல்வாம்."

(இ-ள்)—அம்=அழகிய—மா=பெருமை நாபித்தான துரிய அருள் சிவன்—அலரி=கண்டத்தான மனதோடு நேத்திர இந்திரிய விஷயத்தில் அபிமான சீவன் அலரி—ஆர் உயிரை=பந்தப்பட்டு உடம்பு உலக விஷயத்தில் லாப நஷ்டத்தில் துக்கிக்கும் சீவனைக்கொன்று=வியட்டி மனம் சமட்டி மனம் (தொன்பதம் தத்பதம்) நீங்கி—அருந்தி=அசிபத துரிய அருள் விருத்தியும் ஒடுங்கி துரியாதீதப்பட்டு—இம்மானிடரெல்லாம்=இயாவும் சாட்சி அருளாய் விளங்கக்கூடியவர்—இன்புற்றிருக்கின்றார்=துரிய அருளாய்

விளங்குகின்றார்—அம்மா வெனுஞ் சத்தங் கேட்டகன்ற மாதவற்கு—தன்னை யடுத்தவருக்கு துரிய அருள் சொரூபத்தை விளக்கிக்கொடுக்கும், அநுபவிக்கு—பொய்மா நிறைய மென்றால்—உலகதேகம் யாவும் துன்பம் நரகம் அது பொய் நான் சாட்சி அருளாய் விளங்குகிறேன்—புசித்தவற்கு என் சொல்வாம்—துரிய விருத்தி ஒடுங்கினால், பேச்சு இறந்த இடம்—சொல்ல இடமில்லை.

ஆத்ம நூல்கள் இவ்விதம் இருக்க பவித்தியம்போல் தங்களிஷ்டப்படி உரையும், செய்கையும் வைத்திருக்கிறார். இதை ஓர்ந்துபார்த்து ஆத்ம நூல்படி கண்டனம் எழுதவும் அதனால் உண்மையை, யானும், யாவரும் தெரிந்துக்கொள்ளுவோம். இல்லாவிடின் நன்மை கடைப்பிடி என்ற ஔவை சொல்படி அதுகளை நதள்ளி உண்மையைக்கைக்கொள்ளுமாறு படித்தவர் கேட்டவரவரவர்களுக்கும், அன்பு பூர்வகமாய் வணங்கிக் கேட்டுக்கொள்ளுகின்றேன். இது ஒருவரையாவது, மதங்களையாவது, என்னையாவது பற்றினதல்ல; ஆத்ம நூலைப்பற்றினது. இது பொதுநூல், சார்புநூலல்ல.

கைவல்யம்:—கண்மூடிச் சமாதியிருந் தான் விழித்துப் பார்த்தபோது, பலவடிவாஞ் சராசர சித்திரங்களெலாந் தோன்றுமொரு படமானேன்.

(இ-ள்) கனவின்றி தூங்குகிறது ஈசுர சுழுத்தி கனவு ஈசுர சொற்பனம்,கண்விழித்தும் ஈசுரசாக்கிரம்,ஷெடி சாக்கிரத்தில் கண்ணைமூடினபோது பூமி சூரியன் மரம் உடம்பாதிகளான சர அசுர சித்திரங்களெல்லாம் அடங்கி, சுத்த சூன்ய அறிவு

வெளியாய் படம் (வஸ்திரம்) ஆகவே இருக்கிறது. கண் விழித்தால், பூமி சூரியன் உலக தேகாதிகள் தோன்றும்படி யான, சுத்தசூன்ய அறிவு படமாய் இருக்கின்றேன் என்றார். கவி—"பொய்மை மெய்யென்ற மூடரைப் புண்ணியரென்று புராணங் கூப்பிடுமானால், மெய்மை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திரமுண்டோ, பொய்ய தேகதனில் நாமரூபங்களாம் பூதமாகிய மாயை, மெய்ய தேகதனிற் சச்சிதானந்தமாய் வியாபிக்குமான்மாவே.

முற்று.





கமாலிய்யாப் பிரஸ், கூத்தானல்லூர்.

# அறிவிப்பு.

அடியிற்காணும் புத்தகங்கள் கீழ்க்காணுமவர்களிடம் கிடைக்குமாதலால், அதன் அபிமானிகள் அவர்களுக்கெழுதி பெற்றுக்கொள்ளவும். இதை அடைபவர்கள் அலக்ஷியஞ் செய்யாது முழுவதையும் கவனித்துப்படித்து அறிவதுடன் தங்களது நண்பர்களுக்கும், இதரர்களுக்கும் கொடுத்து அபிவிர்த்தி செய்யுமாறு கோருகின்றேன்.

| | நூல்கள் | ரூ. அ. ப. |
|---|---|---|
| 1 | அநுபவ ஆத்மஞான விளக்கம் | 0—6—0 |
| 2 | ஆத்மஞான சத்தாவஸ்தை அநுபவம் } | 0—5—0 |
| 3 | ஆத்மஞான சம்பந்தர் ... } | |
| 4 | ஆத்ம இதிகாச சாகை | 0—3—0 |
| 5 | ஔவை விநாயகர் அகவலுரை | 0—3—0 |
| 6 | ஆத்மஞான தீட்சை | 0—3—0 |

கிடைக்குமிடம்:—

1 [illegible] பஞ்சாபகேச உடையார், வண்டுவாஞ்சேரி,
திருச்சேரை (போஸ்டு)
(Via) கும்பகோணம்.

2 வே. [illegible]சாமி பிள்ளை, புள்ளமங்கலம். P. O.
(Via) திருநாட்டியத்தான்குடி.

3 சோ. சு. வைரக்கண்ணு,
தலைஞாயருக்கடுத்த, பிரிஞ்சிமூலை,
மணக்குடி (போஸ்டு.) (Via) திருத்துறைப்பூண்டி.